سِلْسِلَةُ كُنْ مُحَدِّثًا ١

இரு ஸஹீஹிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட

# சிறப்புமிகு நபிமொழிகள்

# الأحاديث الشريفة

## المختارة من الصحيحين


தொகுப்பு:

உமர் ஷரீ:ப் அப்துஸ் ஸலாம்



إن هدى الله هو الهدى
دار الهدى
DARUL HUDA
(இஸ்லாமாகிய) அல்லாஹ்வின் நேர்வழியே உண்மையான நேர்வழி

قَالَ النَّبِيُّ ﷺ

# نَضَّرَ اللّٰهُ امْرَأً سَمِعَ مِنَّا حَدِيْثًا

# فَحَفِظَهُ حَتَّىٰ يُبَلِّغَهُ غَيْرَهُ

நபி ﷺ கூறினார்கள்:

**நம்மிடமிருந்து ஹதீஸை செவியுற்று, அதை மனனம் செய்து, பிறருக்கு அதை எடுத்துசொல்கிற மனிதரை அல்லாஹ் செழிப்பாக்குவானாக!**

ஸைது இப்னு ஸாபித் ؓ, திர்மிதீ, 2656

## ஹதீஸ் 1 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّـيَّاتِ،
وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَىٰ

நபி ﷺ கூறினார்கள்:

செயல்கள் எல்லாம் எண்ணங்களை கொண்டுதான் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் அவர் எதை எண்ணுகிறாரோ அதுதான் கிடைக்கும்.

الرَّاوِي عُمَرُ بْنُ الْخَطَّابِ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 1

***

## ஹதீஸ் 2 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ فِيهِ، فَهُوَ رَدٌّ

நபி ﷺ கூறினார்கள்:

யார் நமது இந்த மார்க்கத்தில் அதில் இல்லாததை புதிதாக உருவாக்குவாரோ அது மறுக்கப்பட்டதாகும்.

الرَّاوِيَةُ عَائِشَةُ ﵂ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 2697

* * *

## ஹதீஸ் 3 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

أَحَبُّ الْأَعْمَالِ إِلَى اللهِ الصَّلَاةُ لِوَقْتِهَا
ثُمَّ بِرُّ الْوَالِدَيْنِ ثُمَّ الْجِهَادُ فِي سَبِيلِ اللهِ

நபி ﷺ கூறினார்கள்:

அமல்களில் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானது, தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவதாகும். பிறகு, பெற்றோருக்கு நன்மை செய்வதாகும். பிறகு, அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்வதாகும்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ مَسْعُودٍ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 7534

***

## ஹதீஸ் 4 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

خَيْرُ الْإِسْلَامِ تُطْعِمُ الطَّعَامَ، وتَقْرَأُ السَّلَامَ عَلَىٰ مَن عَرَفْتَ ومَن لَمْ تَعْرِفْ

நபி ﷺ கூறினார்கள்:

இஸ்லாமில் சிறந்தது, நீ உணவளிப்பதும், அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் நீ ஸலாம் கூறுவதுமாகும்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَمْرٍو ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 28

* * *

## ஹதீஸ் 5 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ صَامَ رَمَضَانَ، إِيمَانًا وَاحْتِسَابًا،
غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ

நபி ﷺ கூறினார்கள்:

யார் ரமழானில் ஈமானுடனும் நன்மையை ஆசைவைத்தும் நோன்பு வைப்பாரோ அவரின் முன்சென்ற பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 38

***

## ஹதீஸ் 6 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

سِبَابُ الْمُسْلِمِ فُسُوقٌ، وَقِتَالُهُ كُفْرٌ

நபி ﷺ கூறினார்கள்:

முஸ்லிமை ஏசுவது பாவமாகும். அவனிடம் சண்டை செய்வது நிராகரிப்பாகும்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ مَسْعُودٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 48

* * *

## ஹதீஸ் 7 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

تَعَاهَدُوا الْقُرْآنَ

நபி ﷺ கூறினார்கள்:

நீங்கள் குர்ஆனை மனனம் செய்து அதை தொடர்ந்து ஓதி வாருங்கள்!

الرَّاوِي أَبُو مُوسَى ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ மூஸா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5033

***

## ஹதீஸ் 8 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا يُؤْمِنُ أَحَدُكُمْ، حَتَّى يُحِبَّ لِأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் ஒருவர் தனக்கு விரும்புவதை தனது சகோதரனுக்கு விரும்புகிற வரை முஃமினாக ஆக மாட்டார்.

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 13

***

## ஹதீஸ் 9 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

خَيْرُكُمْ مَنْ تَعَلَّمَ الْقُرْآنَ وَعَلَّمَهُ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் சிறந்தவர் குர்ஆனை கற்று, அதை கற்பித்து கொடுப்பவர் ஆவார்.

الرَّاوِي عُثْمَانُ بْنُ عَفَّانَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: உஸ்மான் இப்னு அஃப்ஃபான் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5027

* * *

## ஹதீஸ் 10 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

يَا غُلَامُ سَمِّ اللَّهَ وَكُلْ بِيَمِينِكَ وَكُلْ مِمَّا يَلِيكَ

நபி ﷺ கூறினார்கள்:

சிறுவனே! அல்லாஹ்வின் பெயரை கூறுவாயாக! உனது வலது கையால் உண்பாயாக! உனக்கு அருகில் உள்ளதிலிருந்து உண்பாயாக!

الرَّاوِي عُمَرُ بْنُ أَبِي سَلَمَةَ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: உமர் இப்னு அபீ ஸலமா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5376

***

## ஹதீஸ் 11 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا تَغْضَبْ

நபி ﷺ கூறினார்கள்:

கோபப்படாதே!

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ؓ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ؒ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6116.

* * *

## ஹதீஸ் 12 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

يَسِّرُوا وَلَا تُعَسِّرُوا، وَبَشِّرُوا، وَلَا تُنَفِّرُوا

நபி ﷺ கூறினார்கள்:

நீங்கள் இலகுவாக்குங்கள்! சிரமப்படுத்தாதீர்கள்! நற்செய்தி சொல்லுங்கள்! வெறுப்படையச் செய்யாதீர்கள்.

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 69

***

## ஹதீஸ் 13 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ يُرِدِ اللّٰهُ بِهِ خَيْرًا يُفَقِّهْهُ فِي الدِّينِ

நபி ﷺ கூறினார்கள்:

அல்லாஹ் யாருக்கு நன்மையை நாடுகிறானோ அவருக்கு மார்க்கத்தில் ஞானத்தை வழங்குகிறான்.

الرَّاوِي مُعَاوِيةُ رضي الله عنه وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله

அறிவிப்பாளர்: முஆவியா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 71

***

## ஹதீஸ் 14 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ لَقِيَ اللّٰهَ لَا يُشْرِكُ بِهِ شَيْئًا دَخَلَ الْـجَنَّةَ

நபி ﷺ கூறினார்கள்:

யார் அல்லாஹ்வை - அவனுக்கு எதையும் இணைவைக்காத நிலையில் - சந்திப்பாரோ அவர் சொர்க்கம் செல்வார்.

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 129

* * *

## ஹதீஸ் 15 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا سَمِعْتُمُ النِّدَاءَ، فَقُولُوا مِثْلَ مَا يَقُولُ الْمُؤَذِّنُ

நபி ﷺ கூறினார்கள்:

நீங்கள் அதான் (பாங்கு) சொல்லப்படுவதை செவியுற்றால் அதான் சொல்பவர் சொல்வதைப் போன்று சொல்லுங்கள்.

الرَّاوِي أَبُو سَعِيدٍ الْخُدْرِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரி ரழியல்லாஹு அன்ஹு,
நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 611

* * *

## ஹதீஸ் 16 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الآخِرِ فَلَا يُؤْذِ جَارَهُ

நபி ﷺ கூறினார்கள்:

யார் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவராக இருப்பாரோ அவர் தனது அண்டை வீட்டாருக்கு தொந்தரவு தர வேண்டாம்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6018

***

## ஹதீஸ் 17 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا أَتَى أَحَدُكُمُ الْغَائِطَ فَلَا يَسْتَقْبِلِ الْقِبْلَةَ وَلَا يُوَلِّهَا ظَهْرَهُ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் ஒருவர் கழிப்பிடத்திற்கு வந்தால் அவர் கிப்லா திசையை முன்னோக்கவோ அதை பின்னோக்கவோ வேண்டாம்.

الرَّاوِي أَبُو أَيُّوبَ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அபூ அய்யூப் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 144

* * *

## ஹதீஸ் 18 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا شَرِبَ أَحَدُكُمْ فَلَا يَتَنَفَّسْ فِي الْإِنَاءِ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் ஒருவர் நீர் அருந்தினால் அந்த பாத்திரத்தில் மூச்சுவிட வேண்டாம்.

الرَّاوِي أَبُو قَتَادَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ கதாதா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 153

* * *

## ஹதீஸ் 19 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

وَيْلٌ لِلْأَعْقَابِ مِنْ النَّارِ

நபி ﷺ கூறினார்கள்:

உளூவில் கரண்டை கால்களை சரியாக கழுவாதவர்களுக்கு நாசம் உண்டாகட்டும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 165

***

## ஹதீஸ் 20 الحديث

كَانَ النَّبِيُّ ﷺ يُعْجِبُهُ التَّيَمُّنُ فِي تَنَعُّلِهِ وَتَرَجُّلِهِ وَطُهُورِهِ وَفِي شَأْنِهِ كُلِّهِ

நபி ﷺ அவர்களுக்கு, - அவர்கள் செருப்பு அணிவதிலும் தலைவாருவதிலும் உளூ செய்வதிலும் இன்னும், அவர்களின் எல்லா காரியங்களிலும் - வலது புறத்திலிருந்து ஆரம்பிப்பது மிக விருப்பமாக இருக்கும்.

الرَّاوِيَةُ عَائِشَةُ ﵂ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 168

***

## ஹதீஸ் 21 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا يَزَالُ الْعَبْدُ فِي صَلَاةٍ مَا كَانَ فِي الْمَسْجِدِ يَنْتَظِرُ الصَّلَاةَ مَا لَمْ يُحْدِثْ

நபி ﷺ கூறினார்கள்:

அடியான் தொழுகையை எதிர்பார்த்தவனாக மஸ்ஜிதில் இருக்கும்போது அவனது உளூ முறிகிற வரை அவன் தொழுகையிலேயே நீடித்து இருக்கிறான்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 176

***

## ஹதீஸ் 22 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّ حَقًّا عَلَى اللهِ أَنْ لَا يَرْفَعَ شَيْئًا مِنَ الدُّنْيَا إِلَّا وَضَعَهُ

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக அல்லாஹ் ஒன்றை இந்த உலகத்தில் உயர்த்தினால் கண்டிப்பாக அதை தாழ்த்தவும் செய்வான்.

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6501

* * *

## ஹதீஸ் 23 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

نَحْنُ الْآخِرُونَ السَّابِقُونَ

நபி ﷺ கூறினார்கள்:

(காலத்தில்) நாம் பிந்தியவர்கள், (சொர்க்கத்தில்) நாம் முந்தியவர்கள் ஆவோம்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 7036

***

## ஹதீஸ் 24 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

كُلُّ شَرَابٍ أَسْكَرَ فَهُوَ حَرَامٌ

நபி ﷺ கூறினார்கள்:

போதையூட்டக்கூடிய ஒவ்வொரு பானமும் ஹராம் - தடுக்கப்பட்டதாகும்.

**الرَّاوِيَةُ عَائِشَةُ رضي الله عنها وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله**

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 242

***

## ஹதீஸ் 25 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا وُضِعَ الْعَشَاءُ وَأُقِيمَتِ الصَّلَاةُ
فَابْدَءُوا بِالْعَشَاءِ

நபி ﷺ கூறினார்கள்:

இரவு உணவு வைக்கப்பட்ட பின்னர், (இஷா) தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் நீங்கள் இரவு உணவை முதலில் தொடங்குங்கள்.

الرَّاوِيَةُ عَائِشَةُ ﵂ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 671

***

## ஹதீஸ் 26 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَن صَلَّى الْبَرْدَيْنِ دَخَلَ الْـجَنَّةَ

நபி ﷺ கூறினார்கள்:

யார் (ஃபஜ்ர், அஸ்ர் ஆகிய) குளிர்ந்த இரு தொழுகைகளை தொழுவாரோ அவர் சொர்க்கத்தில் நுழைவார்.

الرَّاوِي أَبُو مُوسَى الْأَشْعَرِيُّ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அபூ மூஸா அல்அஷ்அரீ ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 574

***

## ஹதீஸ் 27 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ سَرَّهُ أَنْ يُبْسَطَ لَهُ فِي رِزْقِهِ
وَأَنْ يُنْسَأَ لَهُ فِي أَثَرِهِ فَلْيَصِلْ رَحِمَهُ

நபி ﷺ கூறினார்கள்:

யாருக்கு, தனது வாழ்வாதாரம் விசாலமக்கப்படுவதும் அவருடைய வாழ்நாளில் அபிவிருத்தி செய்யப்படுவதும் மகிழ்ச்சியளிக்குமோ அவர் தனது உறவுகளை சேர்த்து வாழட்டும். (அவர்களுக்கு உதவி செய்யட்டும்.)

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 2067

***

## ஹதீஸ் 28 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَيْسَ الوَاصِلُ بِالْمُكَافِئِ وَلَٰكِنِ الْوَاصِلُ الَّذِي إِذَا قُطِعَتْ رَحِمُهُ وَصَلَهَا

நபி ﷺ கூறினார்கள்:

பதிலுக்கு உறவாடுபவர் உறவை பேணுகிறவர் இல்லை. என்றாலும் தனது உறவு முறிக்கப்பட்டாலும் அதை சேர்த்து வாழ்பவரே உறவை பேணுகிறவர் ஆவார்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَمْرٍو ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5991

***

## ஹதீஸ் 29 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ يَلِي مِنْ هَٰذِهِ الْبَنَاتِ شَيْئًا
فَأَحْسَنَ إِلَيْهِنَّ كُنَّ لَهُ سِتْرًا مِنَ النَّارِ

நபி ﷺ கூறினார்கள்:

யார் இந்த பெண் பிள்ளைகளில் சிலருக்கு பொறுப்பாளராக இருந்து, அவர்களுடன் மிக அழகிய முறையில் நடந்து கொள்வாரோ அவருக்கு அந்த பிள்ளைகள் நரகத்தை விட்டு தடுக்கிற திரையாக ஆகிவிடுவார்கள்.

الرَّاوِيَةُ عَائِشَةُ رضي الله عنها وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5995

***

## ஹதீஸ் 30 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

أَنَا وَكَافِلُ الْيَتِيمِ فِي الْـجَنَّةِ هٰكَذَا

وَقَالَ بِإِصْبَعَيْهِ السَّبَّابَةِ وَالْوُسْطَى

நபி ﷺ கூறினார்கள்:

நானும் அனாதைகளை பொறுப்பேற்று வளர்ப்பவரும் சொர்க்கத்தில் இப்படி இருப்போம். இன்னும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது ஆட்காட்டி விரலையும் நடு விரலையும் இணைத்து காண்பித்தார்கள்.

الرَّاوِي سَهْلُ بْنُ سَعْدٍ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஸஹ்ல் இப்னு ஸஅத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6005

***

## ஹதீஸ் **31** الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

السَّاعِي عَلَى الأَرْمَلَةِ وَالمِسْكِينِ
كَالْمُجَاهِدِ فِي سَبِيلِ اللَّهِ

நபி ﷺ கூறினார்கள்:

விதவைகளுக்கும் ஏழைகளுக்கும் உதவக்கூடியவர் அல்லாஹ்வின் பாதையில் போர் செய்பவரை போலாவார்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5353

* * *

## ஹதீஸ் 32 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَا مِنْ مُسْلِمٍ غَرَسَ غَرْسًا فَأَكَلَ مِنْهُ إِنْسَانٌ أَوْ دَابَّةٌ إِلَّا كَانَ لَهُ بِهِ صَدَقَةٌ

நபி ﷺ கூறினார்கள்:

யாராவது ஒரு முஸ்லிம் செடி ஒன்றை நட்டு, அதிலிருந்து மனிதர்களோ, கால்நடைகளோ சாப்பிட்டால் அது அவருக்கு தர்மமாக ஆகிவிடும்.

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6012

***

## ஹதீஸ் 33 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

كُلُّ مَعْرُوفٍ صَدَقَةٌ

நபி ﷺ கூறினார்கள்:

ஒவ்வொரு நன்மையான காரியமும் தர்மமாகும்.

الرَّاوِي جَابِرُ بْنُ عَبْدِ اللهِ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6021

***

## ஹதீஸ் 34 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

اِتَّقُوا النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ
فَإِنْ لَمْ تَجِدْ فَبِكَلِمَةٍ طَيِّبَةٍ

நபி ﷺ கூறினார்கள்:

ஒரு பேரீத்தம் பழத்தின் பகுதியை தர்மம் செய்தாவது நரகத்தை விட்டு தவிர்ந்து கொள்ளுங்கள். உனக்கு அது கிடைக்கவில்லை என்றால் நல்ல வார்த்தையின் மூலமாக நரகத்தை விட்டு தவிர்ந்து கொள்!

الرَّاوِي عَدِيُّ بْنُ حَاتِمٍ الطَّائِيِّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அதீ இப்னு ஹாதிம் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6023

***

## ஹதீஸ் 35 الحديث

مَا سُئِلَ النَّبِيُّ ﷺ عَنْ شَيْءٍ قَطُّ فَقَالَ لَا

நபி ﷺ அவர்களிடம் ஒரு பொருளை யாராவது கேட்டால் அவர்கள் இல்லை என்று சொல்ல மாட்டார்கள்.

الرَّاوِي جَابِرُ بْنُ عَبْدِ اللهِ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6034

***

## ஹதீஸ் 36 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِيَّاكُمْ وَالظَّنَّ فَإِنَّ الظَّنَّ أَكْذَبُ الْحَدِيثِ

நபி ﷺ கூறினார்கள்:

வீணான சந்தேகங்களை விட்டு உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், வீணான சந்தேகம் பேச்சுகளில் மிகப் பொய்யானதாகும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6724

* * *

## ஹதீஸ் 37 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

آيَةُ الْمُنَافِقِ ثَلَاثٌ : إِذَا حَدَّثَ كَذَبَ، وَإِذَا وَعَدَ أَخْلَفَ، وَإِذَا اؤْتُمِنَ خَانَ

நபி ﷺ கூறினார்கள்:

நயவஞ்சகனின் அடையாளம் மூன்றாகும். அவன் பேசினால் பொய் பேசுவான். அவன் வாக்களித்தால் அதை மீறுவான். அவன் மீது நம்பிக்கை வைக்கப்பட்டால் துரோகம் இழைப்பான்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ. எண்: 6095

***

## ஹதீஸ் 38 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ حَلَفَ بِمِلَّةٍ غَيْرِ الإِسْلَامِ كَاذِبًا فَهُوَ كَمَا قَالَ

நபி ﷺ கூறினார்கள்:

யார், இஸ்லாம் அல்லாத வேறு ஒரு மார்க்கதை கொண்டு பொய்யாக சத்தியம் செய்வாரோ அவர் எப்படி கூறினாரோ அப்படியே ஆகிவிடுவார்.

الرَّاوِي ثَابِتُ بْنُ الضَّحَّاكِ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஸாபித் இப்னு அழ்ழஹ்ஹாக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, ஹதீஸ் எண்: 6105

* * *

## ஹதீஸ் 39 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ قَتَلَ نَفْسَهُ بِشَيْءٍ عُذِّبَ بِهِ فِي نَارِ جَهَنَّمَ

நபி ﷺ கூறினார்கள்:

யார் ஒரு பொருளைக் கொண்டு தற்கொலை செய்து கொள்வாரோ அவர் அதன் மூலமாகவே நரக நெருப்பில் தண்டனை செய்யப்படுவார்.

الرَّاوِي ثَابِتُ بْنُ الضَّحَّاكِ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: ஸாபித் இப்னு அழ்ழஹ்ஹாக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, ஹதீஸ் எண்: 6105

* * *

ஹதீஸ் **40** الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَعْنُ الْمُؤْمِنِ كَقَتْلِهِ

நபி ﷺ கூறினார்கள்:

முஃமினை - நம்பிக்கையாளரை சபிப்பது அவரை கொலை செய்வது போன்றாகும்..

الرَّاوِي ثَابِتُ بْنُ الضَّحَّاكِ ﵁ وَالْكِتَاب صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஸாபித் இப்னு அழ்ழஹ்ஹாக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, ஹதீஸ் எண்: 6105

***

## ஹதீஸ் 41 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

الْمُسْلِمُ مَنْ سَلِمَ الْمُسْلِمُونَ مِنْ لِسَانِهِ وَيَدِهِ،
وَالْمُهَاجِرُ مَنْ هَجَرَ مَا نَهَى اللهُ عَنْهُ

நபி ﷺ கூறினார்கள்:

யாருடைய நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் முஸ்லிம்கள் பாதுகாப்பாக இருக்கிறார்களோ அவரே முஸ்லிம் ஆவார். யார் அல்லாஹ் தடுத்ததை விட்டு விலகிச் செல்வாரோ அவர்தான் முஹாஜிர் ஆவார்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَمْرٍو ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, ஹதீஸ் எண்: 10

***

## ஹதீஸ் 42 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

فَوَالَّذِي نَفْسِي بِيَدِهِ، لَا يُؤْمِنُ أَحَدُكُمْ
حَتَّىٰ أَكُونَ أَحَبَّ إِلَيْهِ مِنْ وَالِدِهِ وَوَلَدِهِ

நபி ﷺ கூறினார்கள்:

என் உயிர் யார் கையில் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக உங்களில் ஒருவர் முஃமினாக ஆக மாட்டார், நான் அவருக்கு அவருடைய தந்தை இன்னும் அவரின் பிள்ளையை விட மிக பிரியத்திற்குரியவனாக ஆகும் வரை.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, ஹதீஸ் எண்: 14

***

## ஹதீஸ் 43 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّهُ مَنْ يَسْتَعِفَّ يُعِفُّهُ اللَّهُ

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக யார் ஒழுக்கமுள்ளவராக இருக்க முயற்சிப்பாரோ அவரை ஒழுக்கமுள்ளவராக அல்லாஹ் ஆக்குவான்.

الرَّاوِي أَبُو سَعِيدٍ الْخُدْرِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, ஹதீஸ் எண்: 6470

***

## ஹதீஸ் 44 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا جَاءَ أَحَدُكُمُ الْـجُمُعَةَ فَلْيَغْتَسِلْ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் ஒருவர் ஜுமுஆ தொழுகைக்கு வந்தால் அவர் குளித்துக்கொள்ளட்டும்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عُمَرَ رضي الله عنهما وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 877

***

## ஹதீஸ் 45 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا يَنْظُرُ اللهُ إِلَى مَنْ جَرَّ ثَوْبَهُ خُيَلَاءَ

நபி ﷺ கூறினார்கள்:

யார் தனது ஆடையை பெருமை பிடித்தவராக தரையில் இழுத்து நடப்பாரோ அவரை அல்லாஹ் (மறுமையில்) பார்க்க மாட்டான்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عُمَرَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5783

* * *

## ஹதீஸ் 46 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَا أَسْفَلَ مِنَ الْكَعْبَيْنِ مِنَ الْإِزَارِ فَفِي النَّارِ

நபி ﷺ கூறினார்கள்:

கரண்டை கால்களுக்கு கீழே ஆடை அணிபவர் நரகத்தில் செல்வார்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5787

***

## ஹதீஸ் 47 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

نِعْمَتَانِ مَغْبُونٌ فِيهِمَا كَثِيرٌ مِنَ النَّاسِ الصِّحَّةُ وَالْفَرَاغُ

நபி ﷺ கூறினார்கள்:

ஆரோக்கியம், ஓய்வு என்ற இரு அருட்கொடைகளில் அதிகமான மக்கள் ஏமாந்து இருக்கின்றனர்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَبَّاسٍ رضي الله عنهما وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6412

* * *

## ஹதீஸ் **48** الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

# كُنْ فِي الدُّنْيَا كَأَنَّكَ غَرِيبٌ أَوْ عَابِرُ سَبِيلٍ

நபி ﷺ கூறினார்கள்:

உலகத்தில் நீ ஒரு பரதேசியைப் போல, அல்லது வழிப்போக்கனைப் போல இரு!

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عُمَرَ ﵄ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6416

***

## ஹதீஸ் 49 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَغَدْوَةٌ فِي سَبِيلِ اللهِ أَوْ رَوْحَةٌ
خَيْرٌ مِنَ الدُّنْيَا وَمَا فِيهَا

நபி ﷺ கூறினார்கள்:

அல்லாஹ்வின் பாதையில் காலையில் செல்வது, அல்லது மாலையில் செல்வதானது உலகம் இன்னும் அதில் உள்ளதை விட மிக சிறந்ததாகும்.

الرَّاوِي سَهْلُ بْنُ سَعْدٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: ஸஹ்ல் இப்னு ஸஅத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6415

* * *

## ஹதீஸ் 50 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَوْ تَعْلَمُونَ مَا أَعْلَمُ
لَضَحِكْتُمْ قَلِيلًا وَلَبَكَيْتُمْ كَثِيرًا

நபி ﷺ கூறினார்கள்:

நான் அறிவதை நீங்கள் அறிந்தால் குறைவாக சிரித்திருப்பீர்கள், அதிகமாக அழுதிருப்பீர்கள்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6485

* * *

## ஹதீஸ் 51 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

حُجِبَتِ النَّارُ بِالشَّهَوَاتِ
وَحُجِبَتِ الْـجَنَّةُ بِالْمَكَارِهِ

நபி ﷺ கூறினார்கள்:

நரகம் ஆசைகளைக் கொண்டு மறைக்கப்பட்டுள்ளது. சொர்க்கம் மனதுக்கு சிரமமான காரியங்களைக் கொண்டு மறைக்கப்பட்டுள்ளது.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيّ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6487

***

## ஹதீஸ் 52 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

الْـجَنَّةُ أَقْرَبُ إِلَى أَحَدِكُمْ مِنْ شِرَاكِ نَعْلِهِ، وَالنَّارُ مِثْلُ ذٰلِكَ

நபி ﷺ கூறினார்கள்:

சொர்க்கம் உங்களில் ஒருவருக்கு அவரின் செருப்பின் வாரை விட மிக அருகாமையில் இருக்கிறது. நரகமும் அதுபோன்றுதான்.

الرَّاوِي عَبْدُ اللهِ بنُ مَسْعُودٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6488

***

## ஹதீஸ் 53 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا نَظَرَ أَحَدُكُمْ إِلَى مَنْ فُضِّلَ عَلَيْهِ فِي الْمَالِ وَالْـخَلْقِ فَلْيَنْظُرْ إِلَى مَنْ هُوَ أَسْفَلَ مِنْهُ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் ஒருவர் செல்வத்திலும் தோற்றத்திலும் தன்னை விட மேன்மையாக்கப்பட்ட ஒருவரை பார்த்தால் உடனே அவர் தன்னை விட கீழே உள்ளவரை பார்க்கட்டும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6490

***

## ஹதீஸ் 54 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

بُعِثْتُ أَنَا وَالسَّاعَةَ كَهَاتَيْنِ

நபி ﷺ கூறினார்கள்:

நான் மறுமைக்கு நெருக்கமாக அனுப்பப்பட்டுள்ளேன், இந்த இரு விரல்களைப் போன்று.

الرَّاوِي أَنَسُ بْنُ مَالِكٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6504

* * *

## ஹதீஸ் 55 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ أَحَبَّ لِقَاءَ اللهِ أَحَبَّ اللهُ لِقَاءَهُ،

وَمَنْ كَرِهَ لِقَاءَ اللهِ كَرِهَ اللهُ لِقَاءَهُ

நபி ﷺ கூறினார்கள்:

யார் அல்லாஹ்வின் சந்திப்பை விரும்புவாரோ அல்லாஹ்வும் அவரின் சந்திப்பை விரும்புவான். யார் அல்லாஹ்வின் சந்திப்பை வெறுப்பாரோ அல்லாஹ்வும் அவரின் சந்திப்பை வெறுப்பான்.

الرَّاوِي أَبُو مُوسَى ﷛ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அபூ மூஸா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6508

***

## ஹதீஸ் 56 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا تَسُبُّوا الْأَمْوَاتَ؛ فَإِنَّهُمْ قَدْ أَفْضَوْا إِلَى مَا قَدَّمُوا

நபி ﷺ கூறினார்கள்:

இறந்தவர்களை ஏசாதீர்கள்! ஏனெனில், நிச்சயமாக அவர்கள் தாங்கள் எதை முற்படுத்தினார்களோ அதன் பக்கம் சென்றுவிட்டார்கள்.

الرَّاوِيَةُ عَائِشَةُ ﵂ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6516

* * *

## ஹதீஸ் 57 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّكُمْ مُلَاقُو اللهِ حُفَاةً عُرَاةً غُرْلًا

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக நீங்கள் செருப்பு அணியாதவர்களாக, ஆடையற்றவர்களாக, கத்னா செய்யப்படாதவர்களாக அல்லாஹ்வை சந்திப்பீர்கள்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَبَّاسٍ ﵄ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6525

* * *

## ஹதீஸ் 58 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

أَوَّلُ مَا يُقْضَى بَيْنَ النَّاسِ بِالدِّمَاءِ

நபி ﷺ கூறினார்கள்:

மக்களுக்கு மத்தியில் உயிர்கள் விஷயத்தில்தான் முதலாவதாக தீர்ப்பளிக்கப்படும்.

الرَّاوِي عَبْدُ اللهِ بنُ مَسْعُودٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6533

* * *

## ஹதீஸ் 59 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

اِطَّلَعْتُ فِي الْـجَنَّةِ فَرَأَيْتُ أَكْثَرَ أَهْلِهَا الْفُقَرَاءَ، وَاطَّلَعْتُ فِي النَّارِ فَرَأَيْتُ أَكْثَرَ أَهْلِهَا النِّسَاءَ

நபி ﷺ கூறினார்கள்:

நான் சொர்க்கத்தில் எட்டிப் பார்த்தேன், சொர்க்கவாசிகளில் அதிகமானவர்கள் ஏழைகளாக இருப்பதைப் பார்த்தேன். இன்னும், நரகத்தில் எட்டிப் பார்த்தேன், நரகவாசிகளில் அதிகமானவர்கள் பெண்களாக இருப்பதைப் பார்த்தேன்.

الرَّاوِي عِمْرَانُ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: இம்ரான் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6546

***

ஹதீஸ் 60 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَا بَيْنَ مَنْكِبَيِ الْكَافِرِ
مَسِيرَةُ ثَلَاثَةِ أَيَّامٍ لِلرَّاكِبِ الْمُسْرِعِ

நபி ﷺ கூறினார்கள்:

(நரகத்தில்) நிராகரிப்பாளருடைய இரு புஜங்களுக்கும் இடையில் உள்ள இடைவெளி, விரைவான பயணியின் மூன்று நாள் பயண தூரமாகும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6551

* * *

## ஹதீஸ் 61 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَا بَيْنَ بَيْتِي وَمِنْبَرِي رَوْضَةٌ مِنْ رِيَاضِ الْـجَنَّةِ، وَمِنْبَرِي عَلَىٰ حَوْضِي

நபி ﷺ கூறினார்கள்:

எனது வீட்டுக்கும் எனது மின்பருக்கும் இடையில் உள்ள இடம், சொர்க்க பூங்காக்களில் ஒரு பூங்காவாகும். எனது மின்பர் - மேடை எனது நீர் தடாகத்தின் மீது இருக்கிறது.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6588

***

## ஹதீஸ் 62 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

أَنَا فَرَطُكُمْ عَلَى الْحَوْضِ

நபி ﷺ கூறினார்கள்:

நான் உங்களுக்கு முன் சென்று (உங்களை எதிர்பார்த்தவனாக) நீர் தடாகத்தில் இருப்பேன்.

الرَّاوِي عَبْدُ اللهِ بنُ مَسْعُودٍ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6575

* * *

## ஹதீஸ் 63 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

اِنْهَكُوا الشَّوَارِبَ، وَأَعْفُوا اللِّحَىٰ

நபி ﷺ கூறினார்கள்:

மீசைகளை கத்தரியுங்கள்! தாடிகளை வளருங்கள்!

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عُمَرَ رضي الله عنهما وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5893

* * *

ஹதீஸ் **64** الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا قُلْتَ لِصاحِبِكَ يَوْمَ الْـجُمُعَةِ: أَنْصِتْ وَالْإِمامُ يَخْطُبُ، فَقَدْ لَغَوْتَ

நபி ﷺ கூறினார்கள்:

நீ உனது நண்பனுக்கு - வெள்ளிக்கிழமை அன்று இமாம் பிரசங்கம் செய்துகொண்டிருக்கையில் - வாய்மூடி இரு என்று கூறினால் நீ வீண் செயலை செய்துவிட்டாய்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 934

***

## ஹதீஸ் 65 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَيْسَ الْغِنَىٰ عَنْ كَثْرَةِ الْعَرَضِ،
وَلَٰكِنَّ الْغِنَىٰ غِنَى النَّفْسِ

நபி ﷺ கூறினார்கள்:

செல்வம் என்பது அதிக பொருட்கள் இருப்பதல்ல. என்றாலும், செல்வம் என்பது ஆன்மா நிறைவடைந்திருப்பதாகும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6446

* * *

## ஹதீஸ் 66 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

أَلَا إِنَّ اللهَ يَنْهَاكُمْ أَنْ تَحْلِفُوا بِآبَائِكُمْ، مَنْ كَانَ حَالِفًا فَلْيَحْلِفْ بِاللهِ أَوْ لِيَصْمُتْ

நபி ﷺ கூறினார்கள்:

அறிந்து கொள்ளுங்கள்! நீங்கள் உங்கள் பெற்றோர் மீது சத்தியம் செய்வதை விட்டும் நிச்சயமாக அல்லாஹ் உங்களை தடுக்கிறான். யார் சத்தியம் செய்ய வேண்டுமோ அவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும். அல்லது அமைதியாக இருக்கட்டும்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عُمَرَ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6646

***

## ஹதீஸ் 67 الحديث

مَا عَابَ النَّبِيُّ ﷺ طَعَامًا قَطُّ، إِنِ اشْتَهَاهُ أَكَلَهُ، وَإِنْ كَرِهَهُ تَرَكَهُ

நபி ﷺ அவர்கள் எந்த ஓர் உணவையும் குறைகூற மாட்டார்கள். அவர்கள் அதை ஆசைப்பட்டால் சாப்பிடுவார்கள். அவர்கள் அதை ஆசைப்படவில்லையெனில் அதை விட்டுவிடுவார்கள்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5409

***

## ஹதீஸ் 68 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

طَعَامُ الْاِثْنَيْنِ كَافِي الثَّلَاثَةِ،
وَطَعَامُ الثَّلَاثَةِ كَافِي الْأَرْبَعَةِ

நபி ﷺ கூறினார்கள்:

இருவரின் உணவு, மூவருக்கு போதுமானதாகும். மூவரின் உணவு, நால்வருக்கு போதுமானதாகும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5392

* * *

## ஹதீஸ் 69 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

قَالَ اللهُ: أَنْفِقْ يَا ابْنَ آدَمَ أُنْفِقْ عَلَيْكَ

நபி ﷺ கூறினார்கள்:

அல்லாஹ் கூறுகிறான்: ஆதமின் மகனே! நீ தர்மம் செய்! உனக்கு நான் தர்மம் செய்வேன்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5352

***

## ஹதீஸ் 70 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا أَنْفَقَ الْمُسْلِمُ نَفَقَةً عَلَىٰ أَهْلِهِ،
وَهُوَ يَحْتَسِبُهَا، كَانَتْ لَهُ صَدَقَةً

நபி ﷺ கூறினார்கள்:

ஒரு முஸ்லிம் தனது குடும்பத்தாருக்கு நன்மையை நாடி செலவு செய்தால் அது அவருக்கு தர்மமாக ஆகிவிடும்.

الرَّاوِي أَبُو مَسْعُودٍ الْأَنْصَارِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ மஸ்ஊத் அல்அன்சாரி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5351

***

## ஹதீஸ் 71 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا تَسُبُّوا أَصْحَابِي فَلَوْ أَنَّ أَحَدَكُمْ أَنْفَقَ مِثْلَ أُحُدٍ ذَهَبًا، ما بَلَغَ مُدَّ أَحَدِهِمْ وَلَا نَصِيفَهُ

நபி ﷺ கூறினார்கள்:

என் தோழர்களை ஏசாதீர்கள்! ஏனெனில், உங்களில் ஒருவர் உஹுத் மலை போன்று தங்கத்தை தர்மம் செய்தாலும் அது, அவர்களில் ஒருவர் இரு கையளவு, அல்லது அதன் பாதி அளவு செய்ததை அடைய முடியாது.

الرَّاوِي أَبُو سَعِيدٍ الْخُدْرِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 3673

***

## ஹதீஸ் 72 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّ أَهْوَنَ أَهْلِ النَّارِ عَذَابًا يَوْمَ الْقِيَامَةِ لَرَجُلٌ تُوضَعُ فِي أَخْمَصِ قَدَمَيْهِ جَمْرَةٌ، يَغْلِي مِنْهَا دِمَاغُهُ

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக நரகவாசிகளில் தண்டனையால் மிகக் குறைந்தவர் ஒரு மனிதர் ஆவார். அவரின் பாதத்தின் குழியில் நெருப்பு கங்கு வைக்கப்படும். அதனால் அவரின் மூளை கொதிக்கும்.

الرَّاوِي النُّعْمَانُ بْنُ بَشِيرٍ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6561

***

## ஹதீஸ் 73 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

فَوَاللهِ لَأَنْ يُهْدَىٰ بِكَ رَجُلٌ وَاحِدٌ
خَيْرٌ لَكَ مِنْ حُمْرِ النَّعَمِ

நபி ﷺ கூறினார்கள்:

அல்லாஹ்வின் மீது சத்தியமாக உம் மூலம் ஒருவருக்கு நேர்வழி கிடைப்பது சிவந்த ஒட்டகையை விட உமக்கு மேலானதாகும்.

الرَّاوِي سَهْلُ بْنُ سَعْدٍ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: ஸஹ்ல் இப்னு ஸஅத் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 2942

***

## ஹதீஸ் 74 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ قَالَ : سُبْحَانَ اللهِ وَبِـحَمْدِهِ، فِي يَوْمٍ مِئَةَ مَرَّةٍ، حُطَّتْ خَطَايَاهُ، وَإِنْ كَانَتْ مِثْلَ زَبَدِ الْبَحْرِ

நபி ﷺ கூறினார்கள்:

யார் "ஸுப்ஹானல்லாஹி வ பி ஹம்திஹி" என்று ஒரு நாளைக்கு நூறு முறை சொல்வாரோ அவரின் பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும், அவை கடல் நுரைப் போன்று இருந்தாலும் சரி!

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6405

***

## ஹதீஸ் 75 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ

நபி ﷺ கூறினார்கள்:

யார் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொள்வாரோ அவர் தனது விருந்தாளியை கண்ணியப்படுத்தட்டும்.

الرَّاوِي أَبُو شُرَيْحٍ الْكَعْبِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஷுரைஹ் அல்கஅபி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6135

* * *

## ஹதீஸ் 76 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّ لِلّٰهِ تِسْعَةً وَتِسْعِينَ اسْمًا مِئَةً إِلَّا وَاحِدًا
مَنْ أَحْصَاها دَخَلَ الْـجَنَّةَ

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக அல்லாஹ்விற்கு தொன்னூற்றி ஒன்பது, ஒன்றை தவிர நூறு பெயர்கள் உள்ளன. யார் அவற்றை நன்கறிந்து கற்றுக்கொள்வாரோ அவர் சொர்க்கத்தில் நுழைவார்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 2736

***

## ஹதீஸ் 77 الحديث

لَعَنَ رَسُولُ اللهِ ﷺ الْمُتَشَبِّهِينَ مِنَ الرِّجَالِ بِالنِّسَاءِ وَالْمُتَشَبِّهَاتِ مِنَ النِّسَاءِ بِالرِّجَالِ

பெண்களுக்கு ஒப்பாக இருக்கிற ஆண்களையும், ஆண்களுக்கு ஒப்பாக இருக்கிற பெண்களையும் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் சபித்தார்கள்.

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَبَّاسٍ رضي الله عنهما وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ رحمه الله

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 5885

***

## ஹதீஸ் 78 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّ أَحَبَّ الْأَعْمَالِ إِلَى اللهِ أَدْوَمُهَا وَإِنْ قَلَّ

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக அமல்களில் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானது அவற்றில் நிரந்தரமானதாகும், அது குறைவாக இருந்தாலும் சரி.

الرَّاوِيَةُ عَائِشَةُ ﵂ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6464

***

## ஹதீஸ் 79 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَثَلُ الَّذِي يَذْكُرُ رَبَّهُ وَالَّذِي لَا يَذْكُرُ
مَثَلُ الْحَيِّ وَالْمَيِّتِ

நபி ﷺ கூறினார்கள்:

தனது இறைவனை நினைவு கூர்பவருக்கும் நினைவு கூராதவருக்கும் உதாரணம் உயிருள்ளவர், இன்னும் இறந்தவருடைய உதாரணமாகும்.

الرَّاوِي أَبُو مُوسَىٰ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ மூஸா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6407

* * *

## ஹதீஸ் 80 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَنْ تُعْطَوْا عَطَاءً خَيْرًا وَأَوْسَعَ مِنَ الصَّبْرِ

நபி ﷺ கூறினார்கள்:

பொறுமையை விட சிறந்த, விசாலமான ஒரு கொடையை நீங்கள் வழங்கப்பட மாட்டீர்கள்!

الرَّاوِي أَبُو سَعِيدٍ الْخُدْرِيُّ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﵀

அறிவிப்பாளர்: அபூ சயீத் அல்குத்ரி ரழியல்லாஹு அன்ஹு,
நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6470

* * *

## ஹதீஸ் 81 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الْآخِرِ،
فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ

நபி ﷺ கூறினார்கள்:

யார் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவராக இருப்பாரோ அவர் நல்லதை பேசட்டும். அல்லது, வாய்மூடி அமைதியாக இருக்கட்டும்.

الرَّاوِي أَبُو شُرَيْحٍ الْكَعْبِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஷுரைஹ் அல்கஅபி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6135

* * *

## ஹதீஸ் 82 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِنَّ خِيَارَكُمْ أَحَاسِنُكُمْ أَخْلَاقًا

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் சிறந்தோர் உங்களில் குணங்களால் அழகானவர்களே!

الرَّاوِي عَبْدُ اللهِ بْنُ عَمْرٍو ﷺ وَالْكِتَابُ صَحِيحُ الْبُخَارِيِّ ﷺ

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹுல் புகாரீ, எண்: 6035

* * *

## ஹதீஸ் 83 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَلّٰهُ أَشَدُّ فَرَحًا بِتَوْبَةِ أَحَدِكُمْ مِنْ أَحَدِكُمْ بِضَالَّتِهِ إِذَا وَجَدَهَا

நபி ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக உங்களில் ஒருவர் பாவத்திலிருந்து திருந்தி பாவமன்னிப்பு கேட்பதைக் கொண்டு அல்லாஹ் மிக அதிகம் மகிழ்ச்சி அடைகிறான், உங்களில் ஒருவர் காணாமல்போன தனது வாகனத்தை பெறும்போது அதைக் கொண்டு மகிழ்ச்சியடைவதை விட.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2675

***

## ஹதீஸ் 84 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

بِحَسْبِ امْرِئٍ مِنَ الشَّرِّ أَنْ يَحْقِرَ أَخَاهُ الْمُسْلِمَ

நபி ﷺ கூறினார்கள்:

ஒரு மனிதனின் தீமைக்கு அவர் தனது முஸ்லிமான சகோதரனை இழிவாக கருதுவதே போதுமானதாகும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2564

***

## ஹதீஸ் 85 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا يَدْخُلُ الْـجَنَّةَ نَمَّامٌ

நபி ﷺ கூறினார்கள்:

கோள் சொல்பவன் சொர்க்கத்தில் நுழைய மாட்டான்.

الرَّاوِي حُذَيْفَةُ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﵀

அறிவிப்பாளர்: ஹுதைஃபா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 105

* * *

## ஹதீஸ் 86 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الْآخِرِ
فَلْيُحْسِنْ إِلَى جَارِهِ

நபி ﷺ கூறினார்கள்:

யார், அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவராக இருப்பாரோ அவர் தனது அண்டை வீட்டாருக்கு நன்மை செய்யட்டும்.

الرَّاوِي أَبُو شُرَيْحٍ الْخُزَاعِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஷுரைஹ் அல்குஸாயி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 48

***

## ஹதீஸ் 87 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

وَمَا تَوَاضَعَ أَحَدٌ لِلَّهِ إِلَّا رَفَعَهُ اللَّهُ

நபி ﷺ கூறினார்கள்:

யார் அல்லாஹ்விற்காக பணிவாரோ அவரை அல்லாஹ் உயர்த்துவான்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ؓ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ؒ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2588

* * *

## ஹதீஸ் 88 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ لَا يَرْحَمِ النَّاسَ لَا يَرْحَمْهُ اللهُ عَزَّ وَجَلَّ

நபி ﷺ கூறினார்கள்:

யார், மக்கள் மீது கருணை காட்டவில்லையோ அவர் மீது அல்லாஹ் عَزَّ وَجَلَّ கருணை காட்ட மாட்டான்.

الرَّاوِي جَرِيرُ بْنُ عَبدِ اللهِ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: ஜரீர் இப்னு அப்தில்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2319

* * *

## ஹதீஸ் 89 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

اِقْرَءُوا الْقُرْآنَ فَإِنَّهُ يَأْتِي يَوْمَ الْقِيَامَةِ شَفِيعًا لِأَصْحَابِهِ

நபி ﷺ கூறினார்கள்:

குர்ஆனை ஓதுங்கள். ஏனெனில், நிச்சயமாக மறுமை நாளில் அதை ஓதியவர்களுக்கு அது சிபாரிசு செய்யக்கூடியதாக வரும்.

الرَّاوِي أَبُو أُمَامَةَ الْبَاهِلِيُّ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ உமாமா அல்பாஹிலி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 804

***

ஹதீஸ் **90** الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ غَشَّنَا فَلَيْسَ مِنَّا

நபி ﷺ கூறினார்கள்:

யார், நம்மை ஏமாற்றுவாரோ அவர் நம்மை சேர்ந்தவர் இல்லை.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 101

***

## ஹதீஸ் 91 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

اَلْمُؤْمِنُ الْقَوِيُّ، خَيْرٌ وَأَحَبُّ إِلَى اللهِ
مِنَ الْمُؤْمِنِ الضَّعِيفِ، وَفِي كُلٍّ خَيْرٌ

நபி ﷺ கூறினார்கள்:

வலிமையான முஃமின், பலவீனமான முஃமினை விட சிறந்தவரும் அல்லாஹ்விற்கு விருப்பமானவரும் ஆவார். எல்லோரிலும் சிறப்பு இருக்கிறது.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2664

***

## ஹதீஸ் 92 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

قُلْ آمَنْتُ بِاللهِ، ثُمَّ اسْتَقِمْ

நபி ﷺ கூறினார்கள்:

"அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டேன்" என்று நீ சொல்! பிறகு, உறுதியாக இரு!

الرَّاوِي سُفْيَانُ بْنُ عَبْدِ اللهِ الثَّقَفِيُّ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﵀

அறிவிப்பாளர்: சுஃப்யான் இப்னு அப்துல்லாஹ் அஸ்ஸகஃபி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 38

* * *

## ஹதீஸ் 93 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

الدِّينُ النَّصِيحَةُ ، قُلْنَا لِمَنْ ، قَالَ لِلّٰهِ وَلِكِتَابِهِ
وَلِرَسُولِهِ وَلِأَئِمَّةِ الْمُسْلِمِينَ وَعَامَّتِهِمْ

நபி ﷺ கூறினார்கள்:

மார்க்கம் என்பது நன்மையை நாடுவதாகும். "யாருக்கு" என்று கேட்டோம்! "அல்லாஹ்விற்கு, அவனது வேதத்திற்கு, அவனது ரஸூலுக்கு, முஸ்லிம்களின் தலைவர்களுக்கு, பொதுமக்களுக்கு" என்று நபி ﷺ கூறினார்கள்.

الرَّاوِي تَمِيمٌ الدَّارِيُّ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﵀

அறிவிப்பாளர்: தமீமுத்தாரி ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 55

* * *

## ஹதீஸ் 94 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا صَلَاةَ لِمَنْ لَمْ يَقْرَأْ بِأُمِّ الْقُرْآنِ

நபி ﷺ கூறினார்கள்:

குர்ஆனின் தாயை - ஸூரா ஃபாதிஹாவை ஓதாதவருக்கு தொழுகையே இல்லை.

الرَّاوِي عُبَادَةُ بْنُ الصَّامِتِ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: உபாதா இப்னு அஸ்ஸாமித் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 394

* * *

## ஹதீஸ் 95 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنْ صَلَّى عَلَيَّ وَاحِدَةً صَلَّى اللهُ عَلَيْهِ عَشْرًا

நபி ﷺ கூறினார்கள்:

யார் என் மீது ஒரு முறை ஸலவாத் சொல்வாரோ அவர் மீது அல்லாஹ் பத்து முறை அருள் புரிகிறான்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 408

***

## ஹதீஸ் 96 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

أَقْرَبُ مَا يَكُونُ الْعَبْدُ مِنْ رَبِّهِ، وَهُوَ سَاجِدٌ، فَأَكْثِرُوا الدُّعَاءَ

நபி ﷺ கூறினார்கள்:

அடியான் தனது இறைவனுக்கு அதிகம் சமீபமாக இருப்பது அவன் ஸஜ்தா செய்தவனாக இருக்கும்போதாகும். ஆகவே, (அதில்) நீங்கள் அதிகம் துஆ கேளுங்கள்!

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 482

***

## ஹதீஸ் 97 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا تَأْكُلُوا بِالشِّمَالِ، فَإِنَّ الشَّيْطَانَ يَأْكُلُ بِالشِّمَالِ

நபி ﷺ கூறினார்கள்:

நீங்கள் இடது கையால் சாப்பிடாதீர்கள். ஏனெனில், நிச்சயமாக ஷைத்தான் இடது கையால் சாப்பிடுகிறான்.

الرَّاوِي جَابِرٌ ﵁ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﵀

அறிவிப்பாளர்: ஜாபிர் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2019

***

## ஹதீஸ் 98 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

إِذَا انْتَعَلَ أَحَدُكُمْ فَلْيَبْدَأْ بِالْيُمْنَى،
وَإِذَا خَلَعَ فَلْيَبْدَأْ بِالشِّمَالِ

நபி ﷺ கூறினார்கள்:

உங்களில் ஒருவர் செருப்பு அணிந்தால் வலது காலைக் கொண்டு ஆரம்பிக்கவும். அவர் கழட்டினால் இடது காலைக் கொண்டு ஆரம்பிக்கவும்.

الرَّاوِي أَبُو هُرَيْرَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2097

* * *

## ஹதீஸ் 99 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

لَا تَدْخُلُ الْمَلَائِكَةُ بَيْتًا فِيهِ كَلْبٌ، وَلَا تَمَاثِيلُ

நபி ﷺ கூறினார்கள்:

நாய் இருக்கிற வீட்டிலும் உருவப்படங்கள் இருக்கிற வீட்டிலும் மலக்குகள் நுழைய மாட்டார்கள்.

الرَّاوِي أَبُو طَلْحَةَ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: அபூ தல்ஹா ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2106

* * *

## ஹதீஸ் 100 الحديث

قَالَ النَّبِيُّ ﷺ

مَنِ اسْتَطَاعَ مِنْكُمْ أَنْ يَنْفَعَ أَخَاهُ فَلْيَفْعَلْ

நபி ﷺ கூறினார்கள்:

யார், தனது சகோதரனுக்கு பலனளிக்க சக்தி பெறுவாரோ அவர் அதை செய்யட்டும்.

الرَّاوِي جَابِرُ بْنُ عَبْدِ اللهِ ﷺ وَالْكِتَابُ صَحِيحُ مُسْلِمٍ ﷺ

அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு, நூல்: ஸஹீஹ் முஸ்லிம், எண்: 2199

* * *

سُبْحَانَكَ اللَّٰهُمَّ وَبِحَمْدِكَ
أَشْهَدُ أَنْ لَا إِلَٰهَ إِلَّا أَنْتَ
أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ

அல்லாஹ்வே! உன்னைப் புகழ்வதுடன் உன்னைப் பரிசுத்தப் படுத்துகிறேன். ‘வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை’ என்று நான் சாட்சி சொல்கிறேன். உன்னிடம் மன்னிப்புக் கேட்கிறேன். உன் பக்கமே மீளுகிறேன்.

